பல்வகைப்படு சித்திரத்தொழில்வலாள் பனிமலர்த் தொடைதேர்வாள்
சில்வகைத்திசை மொழியுளாள் பாசுரந் தீட்டலின் னிசையோர்வாள்
கல்வகைக்குண மறையுரைக்கரிய காரணநீடாய்ந்தாள்
வில்வகைத்தொழில் வெல்வகைச் சூழ்ச்சியு மிகுசிறப் புணர்வுற்றாள். [௨]

பொறைதரித்திரி புந்தியின் மந்திரி பூவணை ரதிதேவி
நிறைவ னப்பினிற் றிருவையையீன்றவள் தேர்பணி நீளடியாள்
குறைவினட்புட லாமெனமன்னவற் கூடியில் லறநாவாய்த்
துறையுறத்தின நடத்துவோ ளமுதூறு சொல்வபுட் டமையென்பாள். [௩]

அனையநீர்மையவாய நல்லாட்டியோ டன்புடனினிதண்மி
மனையறம்புரிந் தரசியலிம்பரின் வளர்வுற வாழ்நாளில்
சினைகொளாங்கரு நீழலில்வைகிய தேவர்கோ னவ்வேந்தன்
புனைவபுட்டமைப் பெருமனைப் பாழிவாய்ப் புக்க மயர்ந்தாழ்ந்தான். (௪)

வலியவன்சிலை யாமனவனிதையும் வடிமொழிப் பசப்பாற்றன்
நிலைய ழிந்திணங் கச்செயு வல்லரை நேடிவேண் டுவவீட்டி
யலையிடத்தெழு மமுதனாள் வபுட்டமை யணையிலென் னுயிர்வாழு
மிலையெனிற்பிற னிந்திரனுவனே யென்செய்வ லெனப்போக்கும். (௫)

சென்றுசென்றுசந் திசைவினைப் புலமையோர் செழுமலர்த் திருநோக்கின்
நன்றுநன்றெனத் தகுவடிவேற்றவ ளுடிமாதூறுகுழல்
நின்றுநின்றுபல் சூழ்ச்சிசெய் திணக்குற நேர்கிலாதயர்ந்தார்கா
மென்று மென்றுகீழ் நோக்கிவானிறையுழை மேவினாரினசொற்றார். (௬)

காமவல்லிசேர் கற்பகநீழலிற் கண்கவர் வனப்போங்கு
காமலல்லியர் காமுறவீற்றருள் கடவுளர் தந்தலைவோய்
வாமமேகலை வபுட்டமைத் தேவியை மயக்குவெம்மா லன்றிச்
சாமமேகமான் மாயையின் முழுவலி தன்னினு மியலாதே. (௭)

யாக்கை பெற்றவர் பெறுபய னுன்மருப் பியானையூர்பத மென்றென்
வாக்கைமூடுமுன் குறுநகையநும்பியம் மாண்பெழுமுனிவேந்தர்
தூக்குவூன்பெரு சிவிகைமேற் சென்றவன் டுறுக்கெனப் பாம்பான
காக்கையுற்றசீர் நகுடம னியல்பழங் கதையறி குவனென்றாள். (௮)

வள்ளவாயவெண் டாமரை யாடனின் வடிகலை தேர்ந்தப்
பிள்ளைவெண்மதி நுதலிநின் மற்புயம் பிணைபடா னெனச்சென்றார்
கள்ளறுதவின் குமுதவா யினனலங் கடிதடைகுவலென்ன
உள்ளமெண்ணியோர் மடையனு விந்திர னுத்தமி யுழையுற்றான். (௯)

அற்றநோக்கியவ் வாயிரவிழியின னமரமண் டலவைப்பின்
வெற்றிமீறுபா ரீக்கிதப்புரவலன் வேதியர் தமைக்கூவிக்
கற்றநூல்வலீர் பரிமகங்காணிய கருத்துளேன் குறைகாணு
நற்றினஞ்சொலீ ரென்றன னுவகையி னவிலலுற் றனர்பார்ப்பார். (௰)

வேறு

இன்று வினைநீ வினையே லதனைப்
பின்றாள் புரியப் பெறுமென் றகல்கப்
பொன்மனை யருநற் செயலேல் புகலா
தின்னே செயவுள் ளிசைவார் பெரியார். (கக)

மும்மைக் குணமா றிவரும் முறையின்
மெய்ம்மைப் படுகன் மனமும் விலகும்
செம்மைப் பொருளை நிநேலா சிறிதாம்
அம்மெய்ச் சமயத் தைவிடா ரறிஞர். (கஉ)

மைய்தீர் விழிசேர் மயிலா மனையும்
பொய்தீர் மனமும் புகழும் புணர்வோய்
வைதீகரும் வானவரும் மகிழச்
செய்தீ விரமா கமகச் செயலே. (கங)

தேடற் கரிதாந் தினமண்மையிலே
ஈடற் றுளவா வனவிங் கிசையின்
பீடுற் றவிழக் குடியும் பிறவும்
நாடுற் றநரேந் திரநா யகனே. (கச)

நெஞ்சக் கனகன் னெகிழப் பனிநேர்
செஞ்சொற் பலவித் திறமோ துதலும்
நஞ்சிற் றிகழ்மே னரர்கோ னருளால்
அஞ்சற் பணியா யினயா வுமரோ. (கரு)

பொன்னே ருழுதப் புவிசீ ரயமத்
தன்னேர்மக சாலைச னமைத்தனரால்
முந்நூலினர் மேவினர் மொய்ம் பயமும்
மன்றுடு வலங் கொடுவந் தறுமே. (கசு)

திறையோடு வருந் திறன்மன் னரையவ்
விறையோன் வரவேற் றனனிட்டியரும்
முறையா ககடப் பமுடிப் பெருமான்
குறைதீர் மனைக்கைக் கொடுவந் தனனே. (கஎ)

திருமா தணையத் திறன்மா னுரல்போல்
இருபே ருடனந் தெழுசா லைபுகுந்
தருமா மறையோ ரடிசார்ந் தனரக்
குருவா தியரா சிகள்கூ றினரே. (கஅ)

வேறு

பாவத்து ளாழாது பண்ணவர்வாழ் பதமேற
மாவந்து வரியுமொழி வழிக்கிரியை யினிதாற்றி
பூவத்து விசித்திரவிருந்தைசை யோதி யுயிர்செருக்கபரி
தாவித்த னணைகிடந்தல் சரிதழல்கண் டருவநத்தான். (க௯)

அடலேற்றுச் சினப்பெரியோ ரபயமகமாற் றிசெற் றரிசில்
முடியேற்ற மனைவியின முறுவல்கொடு பரிச்சமத்தை
கொடிபோற் றழீஇக்கிடக்கக் கோதின்மறை முறையவினை
நடையேற்கு மமைபிப்பா நனியமெந்தன்றூர் நிலத்தேவர். (உ௰)

ஞிமிறூது மலர்க்கோதை நிருபனகை முகநோக்கி
அமராடி யொளிந்தவர்த மரிவையர்மா னமுங்காக்கும்
எமையாளுந் திறலோயின் றெப்பிபல்லாயிரர்முன்
அமரீன விலங்குமொவ்வா வவலவினைக் கியானிலக்கோ (உக)

ஊனவிழி மணிக்கொடியு மொருக்கொளித்துப் பகர்கூடும்
கானவுழை சிறுவாவிற் கடிமறைத்துப் புறத்துலவும்
பானுரையா டையுமணியும் பாவையுயிர் மாய்பரியின்
மேனிதழீ இனமென்றால் வியப்போடு சிரிப்பலவோ. (உஉ)

அற்சீறு நறுங்குழலி யடவிசெலத் தாசரதி
பொற்சீதை யினிதளித்துப் புரவிமக மாற்றினனால்
மற்சீய மனையோயிம் மறையோர்வேட் டனவுதவி
நற்சீவ னுடலமர நாடிவினை யருள்கவென்றாள். (உங)

நாணிமிகப் புவிநோக்கு நாண்மலரா னனிவார்த்தை
ஆணுவமா வுறுதடந்தோ ளண்ணலுறுஞ் செவிமடுத்துப்
பாணமரு மமுதூறு பனிமொழிநற் றவரினிதழ்
வாணிநிகர் வல்லாயென் வாய்மொழியன் பொடுகேட்டி. (உச)

சாற்றறமாம் பொருளேற்றச் சகடமெனு மனைவாழ்க்கை
ஆற்றவினை நுகம்வீக்கி யாயிழையுந் தானுமக
மேற்றவராய்ப் பூண்டேர்ப்பி னைத்துணைத்தா மமுநடக்கும்
வேற்றுமையே யிறையளவு மேதினியி னிற்காதே, (உரு)

இற்றிநவில் வழிவேள்வி யியற்றினர் பார்வைகொடு
உற்றனையாண் டாக்குவினை பொய்யாது மறைப்பொருளைக்
கற்றினன கலங்குதலுங் கடிமணமாற் றிகெணவன்
கொற்றிரம்பி யொழுகுதலுங் கோதைகையர்கற் பினுக்கழகோ. (உ௬)

தேகாபி மானமுநர் சிமிழ்ப்பயத்து மறநூறி
யாகாமியம்பெருகா தமரர்பத மமரும்வண்ணம்
யாகாதி நிருத்தியங்க ளியாவுமியற் றுமர்வேந்தர்
தோகா யானதுபுரியல் துணையிருந்து முற்றுவிப்பாய். (உ௭)

வேதமொழி கடைப்பிடித்து வேந்தெனக்கின் றினிதருளுங்
காதன்மிகு கட்டளைபிக் கருமமெனிற் புரிவலென
மாதாசி மகிழ்நனொடு வலம்புரிந்து தொழுதடைந்தாள்
சீதமல ரணையிலெலாஞ் சிவார்ப்பிதமென் றுளத்தடைத்தாள். (உ௮)

வெம்பந்த வினையறுத்து வீடருளென் றைந்தவித்து
நம்பன்ற னிணையடியை நாடினளா யணைக்கிடந்த
அம்பந்த விழியாட்கு மாவியறு பரிக்குமுடற்
சம்பந்த மழலோம்பு சதுரர்கடா மிசைத்தார்கள். (உ௯)

பொற்கோர மேதவினை யாற்றியமிக் காற்றலெல்லாம் பொருந்து * பிரம்மா
உற்காதா வோதாவத் வரிப்ப்ரம ணாசந்திச் வுயிர்பிரஸ்தாதா
புற்கோலு மைத்ராவ ருணபிரதி பிரஸ்தாதா போதாவாதி
சொற்கூற வமைத்தவொரு வீரெண்மர் மகத்துரிய தொழில்செய்வித்தார். ௩௰

வேறு.

பல்லியமா முழக்குமெழு பரிமகத்திப் பரிசாகப் பலகாலுள்ளம்
அல்லலுற வொளித்திருந்த வமரர்பதி யிதுநோக்கி யமயமென்றே
புல்லியசா ருலவுடற் புகுந்தெழுவேட் கையின்வாறு புரிந்தானந்தோ
புல்லியர்வான் பதமுறினும் போய்விடுமோ வவர்களற்ப புத்திமாந்தோ. (௩௧)

இறையளவு மறிவின்றி யிந்திரன்றீ வினைச்செயலா லிணையின்மேதம்
குறைவுகொடு கெடவறிஞர் கூட்டமிரிந் தேகினராக் கொடுமைகண்டு
இறைவனக மிகவயர்ந்து மதியிழந்து செயன்மறந்து மேக்கமீறிச்
சிறைபுகுந்த கோளரிபோற் சீற்றமெலா முள்ளடக்கித் திகைக்குங்காலை (௩௨)

---

| | | | |
|---|---|---|---|
| * ப்ரமமா | உத்காதா | ஹோதா | அத்வர்யூ |
| ப்ரம்மணாச்சஸி | ப்ரஸ்தோதா | மைத்ராவருணஹ | ப்ரதிப்ரஸ்தாதா |
| ப்ரோதா | ப்ரதிஹர்த்தா | அச்சாவாகஹ | நேஷ்டா |
| ஆக்னீத்ரஹ | ஸுப்ரம்மண்யஹ | க்ராவஸ்துத் | உன்னேதா. |

எட்டெட்டுக் கலைவிரிவு மெவர்க்கினைவு முணருணர்வு மிறைசீரோது
மெட்டுற்ற நல்லிசையு முயர்தவமு மின்பரிசும் விபுதமாராங்
துட்டத் தூசருறவும் கொடியிலெகரும் பொய்மிளல் துப்புமோர்தல்
நட்டுற்ற வர்களிடத்தோ தலும்பிறநற் குணமுளநா ரதனு மேமேலான். (௩௩)

வேறு.

வெந்த மெண்மைநீ-ரெந்தை கண்மணீஇ
யுந்துலக்கமே-வந்துமேயினான். (௩௪)

வடிவுகண்டாலும்-அடிவணக்கியம்
முடிகொள்மன்னவன்-படிவிலாசவான். (௩௫)

என்னின்முன்னையோர்-நென்னல்செய்தவந்
துன்னுவன்றகொல்-என்னின்மேவினீர். (௩௬)

ஆதலெந்திருந்-நாதரித்திடென்
றோதவுற்றனன்-மாதவத்தனே. (௩௭)

தட்டுறுதுமா-விட்டியாற்றினும்
துட்டர்செய்கையால்-நட்டமாச்சுதே. (௩௮)

அன்னதன்றிமற்-றன்னையும்பவப்
பின்னலுற்றதின்-மன்னர்மன்னனே. (௩௯)

வேறு.

எவராலுந் தன்படையா விசைமுனிவ னுரைவழித்தீ
உவராழி சூழ்கிடந்த வுலகமுழு தாள்குரிசில்
செவிவாயுட் புகவிதயச் செழுமலர்காய்த் தலமாத்துப்
புவிமீது விழுந்துபல புலம்பினைவா னிவைநினைவான். (௪௰)

விண்ணுலகை யாளவய மேதமியற் றினனதனில்
எண்ணிலட முதித்தனவென் றியம்பினரிம் மெய்ம்முனிவர்
மண்ணுலகு மக்களுளரும் வசைமொழிவா ரந்தோவீ
தெண்ணிலென தூழ் வலியதன்றி யினவினை யியற்றிலனே. (௪௧)

இவ்வண்ணம் நினைந்தரச னிருடியடி பணிந்தெளியேன்
உய்வண்ண மொன்றுளதே லுரைத்தருவல் சாற்றுதியென்றான்
செய்வண்ண வினையிலுற்ற தீவினைக்கு மூழ்வினைக்கு
மைவண்ணன் பரவுசெந்தீ வண்ணனருள் பெறிலோடும். (௪௨)

ஆர்த்தகடல் புடைபரவு மவனியிலிவ் வினைத்தொடர்பைப்
பேர்த்தகல வெறியவன்னும் பெட்பினருக் கேற்றவழி
தீர்த்தநல மூர்த்திதனைச் சென்றடி வசித்தாற்றப்
பார்த்தலினே பாறுமின்னும் பகருதுங்கே ளெனிதென்று. (௪௩)

வேறு.

அஞ்சமர்க் கூடுகொடங் வயணரிமேல் சிழறிய
வஞ்சமாக் கூடாத வகையமர்ந்தார் குரியதலம்
கஞ்சமாக் கூடமெனக் கவின்பரவை யிசைத்தமரும்
வெஞ்சமாக் கூடலென விளம்பிடுமோர் சிறந்ததலம். (௪௪)

வேறு.

அப்பொற் பதியே யென்னுளத்தி னகலாப்பதிநீ யாங்கெய்தி
ஒப்பற் றிடுபுண்ணியதீர்த்த மொன்றுண்டதின் மெய்த்தவமேலோர்
செப்பற் கியைய வினிதாடித் தெய்வத்திருநீறுடற்பூசி
எப்பற் றினிலு முழலாதா ரேத்துமெந்தை கழலெருழுவாய். (௪௫)

தடிவாற் கற்றுவுறுவனைத்துந் தவளத்தீம்பால் பாவினுகன்
மடிவாய்க் காம்பின் வழிகாணன் மானுகையா லப்புரத்தைப்
முடிவாக் கியநிவணலுவ து முழுமுதறினுங் கொக்கிடைநற்
கடிவாய்த் திலதவெஞ்சைதனிற் கசிந்துநிலவுங் கருணைகொள்வாய். (௪௬)

மௌவற் றொடையத் திருநெடுமான் மகனுர்மகனிவ் வாறிசைத்துப்
பௌவப்படைவாண் மறவீரன் பரவவிண்ணு றிசைந்துசென்றான்
கொவ்வைக் கனிவாய் வபுட்டமைப்பூங் கொம்பர்களிதூங் கிடக்கொடித்தேர்
தெவ்வைப் புடைக்கு மெழுமதமா சேனைசூழ விறையெழுந்தான். (௪௭)

நீணுட்துணவு வனமுடலி னிரப்புபாத்திற் களிற்றுயிசை
பூணுடைகண்மற் றரியபொருட் பொதியேற் றியுறப்புரிகடந்து
சேணுட்டுளைபைந் தருவென்னிற் சிறிதோபெரிதோ யார்ப்பவெனக்
காணுவெழுந்த தொப்பவளர் காவுங்கோடும் பலகடந்தார் (௪௮)

மெய்வத் திதுவென் றுடன்முழுதும் வெண்மைப் பொடிசண் ணித்துளத்தே
ஐவத்திரயீ ரைங்கரத்தோ டரனையடைத்து ச்சந்ததமும்
சைவத் திருவாளர்கள் கரையிற்றவநோற்றிடு காவிரிபரந்து
தெய்வத் தமிழ்ச்சொற்றி ரனுலகிற் றெரியவிளக்குங் கொங்கடைந்தார். (௪௯)

பூதகணங்கள் தெய்வநந்தி பொருந்தும் பொன்னார்திருமதிலும்
பாதகங்க ளறமாற்றும் படர்வான்மிளிருங் கோபுரமும்
சீதமிகுபுன் மதிவளருஞ் செக்கர்யானைச் சடைப்பெருமான்
பாதகமல மறவாத பத்தர்செந்தாந்தி பலகண்டார். (௩௰)

வழிக்கொ ளாயன் பலபதிகள் வணங்கி மணிலைய யிருகரையுங்
கொழிக்குமாம்பி ராவதிநற் குளிர்நீர் நதியைத்தாண்டியுள்ளாஞ்
செழிக்கும் விகிருலைப் பதிநோக்கிச் சிந்தைகளிந்து பணிந்தெழுந்து
விழிக்கொள் ளொளியா மிறையை முன்னிமேயவசிற்றுறருகுற்றான். (௩௧)

வலக்கண் வலத்தோ ளொடிப்பவக மலர்ந்துமகக்கே டகல்கவெனத்
துலக்க முறச்சங் கற்பமருஞ் சுருதிமுறையிற் புரிந்துள்ளத்
தலக்க ணறப்பன் முறைமூழ்கி யாடையணிந்து பொடிபூசி
இலக்கமுறையைத் தெழுத்தோதி யிடிறூனம் பலபுரிந்தான். [௩௨]

துண்டப் பிறைவா ணுதலியன்பிற் சூழத்திருவீ தியைவணங்கி
அண்டத் துயர்கோ புரமிறைஞ்சி யடலேற்றருகார் கொடிமருங்கிற்
றண்டிற் றரைவீழ்ந் தெழுந்துவலஞ் சார்ந்திறில்லா வின்பமுதக்
கண்டைக் கண்ணேற் கண்டுருகிக் கசிந்தா னந்தக் கடற்படிந்தான். [௩௩]

வேறு.

ஆடினன் றுளமிட்டோ மாகரசிவவென் றோதிப்
பாடினா னகமுநேயப் பான்மையா யிளகிநைந்து
வாடினன் வருந்தியன்பு மயமதாய் நீக்கமற்றுக்
கூடினன் பிரிவிலாத குணங்கொண்ட வரசர் கோமான். [௩௪]

செந்தமிழ்க் குழவிக்கன்று திருமுலைப் பாலளித்த
சுந்தரக் குமரிபாதந் தொழுதறு முகவற்போற்றி
யந்தநா ளுணவுபோக்கி யற்றையிறணந் தெல்காண்முன்
மந்திரக் கடன்க ளாற்றி மாதவம் புரியலானான். [௩௫]

ஆய்ந்துமா யாதுமக்க ளாக்குபாதக நீர்ப்பெளவம்
மாய்ந்தறச் சுவற்று வெய்ய வடவைநே ரழற்பிழம்பை
ஓய்ந்தசிந் தையினடைந்தங் குற்றபோ தரசே யாண்டோம்
தேய்ந்தநின் வினைகளென்னச் சேணிலோர்வாக் கெழுந்த. [௩௬]

காயைக் கனியைத் தின்றுகடுங் காட்டிற் கோட்டிற் புலனவித்து
மாயப் பிறவியறநோற்று வதிமாதவத்தோர் பலரிருக்க
நாயைச் சிவிகை யேற்றுவித்த நலமாயென்னை யாட்கொண்ட
தேயக் கண்ணிக் குட்படுமென் னிமலாபோற்றிபோற்றியவே. [௩௭]

முப்பாழ் கடந்து துரியமற்று முழுதுமோடி நேடவதற்
கப்பாற் கப்பாற் கப்பாலா யண்ணுந் துயரு மருவுருவே
மெய்ப்பால் வெண்ணீ றணிந்தடியார் வேண்டவிடைமேல் வருமெந்த
னப்பா நாயேற்கருள் சுரந்தவரசே போற்றிபோற்றியரோ. [ருஅ]

என்று பலதோத் திரம்புரிந்தேத் திசைபூவோ டனைவோர்களுங் களித்து
கன்று குணிலா விளவெறிந்த கண்ணன்பாக மகவளித்த
குன்று தநுவாக் கொண்டமுக்கட் கோமாற்கு யாலயபூசை
நன்றுமனைத் தோடியற்றிவிழா வரிசைபலவும் புரிந்திருந்தான். [ருகூ]

பண்ணூர் மொழியெம் மன்னையிடப் பாகமகலா விகிருதேசன்
றண்ணா ரடியைத் தணக்கவுகந் தரியாதன்பு பின்னிழுக்க
மண்ணுறுயிரைப் புரக்கும்பொறை வலிந்துமுன்னின் றிழுக்கவிறை
விண்ணோர் மகிழ வினிதகன்றான் மிளிரா ரியனா டுடையவள்ளல். [சுய]

படியா வலியடலைக்கொடி பாவட்டணி வெண்மதிதோய்ந்த
முடியா ரடிய னெனமுனிவர்முதலோர் களிக்கப் புவிசெழிக்கப்
பிடியா னையிரு ளகமலரப் பெம்மான் வெஞ்சைக் காண்டுதொறுங்
குடியா யணுகிப் பணியியற்றிக் கொங்குநன்னா டினிதாண்டான். [சுக]

ஆண்டு பலபுண் ணியமியற்றி யமலையிடத்தா னடித்தொண்டு
பூண்டு சிவமேதெய்வமெனப் புந்திகொண்டு சிவபோகம்
வேண்டுபவர்வான் வெஞ்சைதொழல் வேண்டுமென்னும் வியனுலகை
ஆண்டு முடிவில் முடிவிலரனடிக்கீ ழமர்ந்தா னரிவையுடன். [சுஉ]

மேத யாற்றிய வேந்த னெய்திய
தீது நீங்கிய செய்தி கூறினும்
யாதர் காதலின் மாழ்கு வாசவன்
குறும் நீக்கமும் சொல்லு வாமரோ. [சுங]

ஆகப்படலம்சு-க்குத் திருவிருத்தம் ஙசக.

---

# புரந்தரப் படலம்.

(-)

மையரி நெடுங்கட் குமுதவாய்த் தளவ வாணகைவபுட்டமைத்திருவை
கொய்யுளைப் புரவிமகத்திடைக்காவாக் கோதுறு கைக்கிளைமீறி
வெய்யகிம் புரிக்கோட் டிறற்பதத்தவள வேழமீ துலவுவிண்ணவர்கோன்
ஐயகோ கலங்கிமாழ்கின னகலுமாற்றிடை நாரத னெதிர்ந்தான். [க]

நல்லவ ரிடையுந் தீயவரிடையும் நண்ணினன் னெறிபுகல் யாழின்
வல்லமா முனிவ னலர்மல ரடியை மகபதி வணங்கவன் றோன்றன்
வில்லொளி மழுங்கித் தரைகவிழ்முகந்தை மெய்ம்முனி நோக்கிவிண்வேந்தே
பல்லியமுழுங்கப் பவனிசெனீயிப் படிதனியேக வென்பரிசே. [௨]

என்னலுமகவான் மகதியாழ்முனிவ னிணையடி பணிவுடனேந்தி
இந்நிலமேழ்நீ பூாயமூவுலகத் தெதிர்நிகழ் விறந்தகா லத்துச்
சொன்னினைவதிலு மியலுவவனைத்துந் தூய்மையி லறிதுணர்திறலோய்
என்னகநிகழ்ச்சி யறிந்திலைபோலு மென்றன னுளமகநாணி [௩]

கண்ணிநல் லுருவி னெழிலினைநோக்கிக் கடிமணம் நாசியின்மோந்து
பண்ணி னேர்மொழியி னமுதிருசெவியிற் பலமுறைமாந்தி மெய்பொடிப்பத்
தண்ணிய விதழை நீருறச்சுவைத்துத் தடமுலைபுயமுறத்தழுவி
பெண்ணரு மகனு மணைந்திடினன்றே பெருகிடுங் கலவியினின்பம். (௪)

சாதியி ரைண்டு மூன்றிசை காலந் தத்துவங் குணமொடு பருவம்
ஆதிய தாய்ந்து மகப்புறத்தொழிலு மடைவுட னியற்றி யிங்கிதமாய்
மாதுளங்கனியக் கலவிசெய் வோரே மதனவின் பத்தினை யடைவார்
மாதுளங்கனியி லுருசிதேர் கவியை மானுவ ரஃதிசையாதார். (௫)

இசைபெறு முலகில் விழாமணங் கூத்துள் ளிடர்ப்படு பொழுதிடைத்தழுவல்
வசைமிகு துயில்பித் திழிமதுமயக்கு மற்றுணர்வறு மமயத்தும்
இசைவிலா விடத்தும் வலுவினிற் புணர்ந்தங் கெயதுறுசுகம்புறஞ்சிடக்கும்
பசையில்வெள் ளெலும்பைக் கடித்துத்த லுதிரம் பருகுநாய்மகிழ்தலைமானும்

மதனநூற் றுறைதேர் வானவர் மகளிர் மடலெழுதிடுவனப் புடைநீ
இதமறு தொழிலை யியற்றிய தோரி னேக்குறு காமுகர்கொள்ளு
மிதமில்வா சைக் கிலைபயமான வெட்கமென் றிடுமொழி சாதம்
கதிதரு வேள்வி யழிந்ததா லந்தக் கடுவினை நினைவிடா தந்தோ. (௭)

என்னயாழ் முனிவ னிசைத்திடுமுரைந்தீ யிருசெவி மடுத்தவானவர்கோ
மின்னுவா னிடியிற் றிடுக்கிடுபாம்பின் மெய்பதைத் துணர்வழிந் தையோ
துன்னிய வசுரர் துயர்செயக்கூடிச் சூழினும் வானவர்தடுப்பர்
பன்னவுங்கூசும் பழிவந்து வளைந்தாற் பரிந்ததைத் தடுப்பவருளரோ. (௮)
[விடுத்து

கடைக்கணின் பார்வை கிடைக்குமோ வென்னக் கரைந்துள நங்கைமார்
விடைத்தொழில் புரிந்து மகத்திடைப்புகுந்து மதியிலாவிழிவினைப் புரிந்தேன்
சுடர்ப்படு முடியா ரிருட்படு குழலார் சூழ்ந்தினிச் சிரிப்பரே பவமும்
விடப்படா தென்னச் சூழுமேயென்று மெலிந்து நாரதனடி வீழ்ந்தான். (௯)

இவ்வினைதீர வெளியனேற்குத்த வின்மொழி தருகவென்றிரந்தோன்
உய்வினைகருதிச் சங்கரர்ப்பழிச்சி உம்பர்கோன் சோர்முகநோக்கி
எவ்வினைகளுக்கு மிருதிகள்கழுவா யியம்புநீ யியற்றுதி வினைக்குக்
கொவ்வையங் கனிவாய்ப் பசுங்கொடிப்பாகன் குளிரடி யன்றிவேறிலவே.(ய)

அகத்தியன்தந்த வருந்தமிழ்நிலத்து ளம்மைவுறு கொங்குமண்டலத்தின்
மகத்துவ மிகுந்த விகிர்தமாபுரியின் மன்னிவாழ் விகிர்தலிங்கேசர்
சகத்திரநாம மகத்தினிநினைந்து தண்மலர் கொண்டருச்சிப்போர்
முகத்தினில் விழித்தோர் பவமெலாமகலும் முக்கணெம் மான்றிருவாணை (கக

எனத்துகட்டுறையன் றீதுமாவேத மியம்பிய வாமெனவிசைத்தான்
நின்றுநல்வினையு நெருங்கியதநறு னெறியிடைப் பட்டனனிசைத்தேன்
மனமயராது நிவினையஞ்சி மானிடத்தானடி பேணித்
தனைநிகர் வெஞ்சைநகர்புகிற் பாவந் தணியுமென் றகன்றனன்முனிவன்.(கஉ

வாடியபயிர்க்கு வானநீர் போல மாமுனிவானுரைநேரா
நீடியதுயரஞ் சிறிதகன் றகல்வான் னெறிகொடு பைந்துழாய்ப்புயமால்
தேடியபதத்தெம் சிவபிரான்விளங்குந் திருவெஞ்சைப் பதிதனைக்காணக்
கூடியமனத்தாற் றென்முகமேகிக் குளிர்புவி யிழிந்தனன் மகவான். (கங)

பவமகல் சிற்றுறருகுற வுடலம் பையப்பயப் புளகமாகியதங்
கவமிகு சிந்தை தெளிந்தது கண்ணீ ரருவிபோல் வழிந்தது நிகழ்ச்சி
நவமென விரும்பு தெய்திய மகவா னன்கருள் வெஞ்சைநகன் னினமென்
றுவமையி லுவகை கொடுவிருகாமு முச்சிமேற் குவித்தனன் செல்வான்.(கச)

அவிரொளிக் கனக சினகரந்தோற்ற வாகரசிவனென விறைஞ்சி
தவமுனிவோர்க ளிருகரைமேய தண்ணிய நதிமுறையாடி
தவளவெண்ணீறு கண்டிகைசூடிச் சங்கரனைந்தெழுத்தோதி
உவமையி னந்திகிடைகொடு கோயி லுட்புகுந் நாடினன்றொழுதே. (கரு)

வேறு.

கங்கா தரனே சரணஞ் சரணங் கறையார் களனே சரணஞ்சரணம்
பொங்காடரவப் பூணே சரணம் பூதப்படையாய் சரணஞ்சரணம்
வெங்காலனைமுன் விழ்த்தோய் சரணம் வேதப்பொருளாய் சரணஞ்சரணம்
சங்கார் குழையாய் சரணஞ்சரணம் சடைமேல் மதியாய் சரணஞ்சரணம்.(கசு)

வேறு.

பாதக மனைத்தமாற்றும் படிறனே யெனினுமென்னைக்
காதலாய் வலிதினின்று காத்திட வேண்டுமையா
காதது ரத்தினின்று கருதுவோர் பவமும்போக்கும்
நீதனே னினையுடைந்தே னிமலனே போற்றிபோற்றி. (கள)

வாய்மொழி குளறக்கண்ணீர் வடியமெய் நடுங்கவோதத்
தாய்மொழி யனந்தமோதி யமசர்கோ னிரந்து நின்றான்
சேய்மொழி போலக்கேட்டுச் சிவபிரானஞ்சே லென்னத்
தாய்மொழி வினவுசெய்போற் சதமகன் களித்து வீழ்ந்தான். (கஅ)

புரண்டுநின் றரனைப்போற்றிப் புவனமீன் றெடுத்தகன்னி
யிரண்டுநான் மலர்ப்பாதத்தை யேத்திமே லவனைவாழ்த்தி
திரண்டவர் திலக்குமேலவர் சித்தர்மா முனிவர்சூழ
அரண்டிகழ் வெஞ்சைதன்னி லமரர்கோ னமர்ந்தான் பன்னாள். கக)

தன்பெயர் குட்டிலிங்கந் தாபித்துக் கூவந்தோண்டி
நன்மகம் பலவியற்றி நடுக்குறு பவத்தைப்போக்கிச்
சின்மய விகிருதநாதன் சேவடிபணிந்து கேட்டுப்
பொன்னகர் புகுந்து வாழ்ந்தான் புரந்தரன் முனிவரேத்த. (உ௰)

வேறு

காமனைந்தி மலரைங் கணைதொடக்
காமனர்ந்திய கேடறல் காட்டினும்
நாமநந்திறம் பாவசு ரேசன்முன்
சோமநந்தி பதம்பெறல் சொல்லுவாம். (உக)

ஆகப்படலம் எ-க்குத் திருவிருத்தம் ௩௬௨.

---

# சோமநந்திப் படலம்.

பூதலமும் பாதலமும் பொன்னுரு மீதலமும்
காதன்மனத் தெழுந்திடலோர் கணப்பொழுதி லிலகிவரும்
சாதனையான் சூதறியான் றருமகுண மிக்குடையான்
மாதவத்தி னிலகாணு மனமுளவோ ரசுரேசன். (க)

பிறப்பென்ப தடைந்தவர்கள் பிஞ்ஞுகன்ற னினையாரேல்
இறப்பென்ப தவரைவிடா திருப்பதென்ப துண்மையந்தோ
இறப்பென்ப திலனுகி யெவ்வுயிர்க்கு முயிரான
பிறப்பென்ப தறியானைப் பேணினன் மனமுடையான். (உ)

பிரசகொடிப்பூ நிறத்தாளைப் பிரியாம லிடமமர்த்தி
சர்பகொடி நுண் ணிடைபாளை யெரிவணச்செஞ் சடையிருத்தி
சார்ஙகமொடு மழுவெடுத்தோர் தரியலர்முப் புரம்பொடித்த
கார்வகடுக்கை சூடியனைக் காதலித்து வாழ்த்திடுவான். (௩)

எவரேனுந் திருநீறு பூசிவரக் கண்டானேல்
இவரேயெம் வினையறுக்கு மெம்பெருமா னெனப்பணிவான்
சிவனேயெஞ் சிவனேயச் சிவபெருமான் மகிழ்ந்திலகப்
புலிமீது நடமாடும் பூங்கோயி லிதுவென்பான். (௪)

என்னனைய மந்தமதி யினர்கடைத் தேறுதல்வேண்டிப்
பொன்னனைய செஞ்சடையெம புனிதனிறை கருணையினால்
மன்னுமக்க மணிபுதி மணிபுனித வுருத்தாங்கி
இந்நிலத்தில் வருவதன்றோ வெழிலடியார் வேடமென்பான். (௫)

சிவவேடத் தவர்க்காணல் சிவபெருமான் றரிசனமாம்
சிவவேடத் தவர்ப்பணிதல் சிவனடியார்ப் பணிந்திடலாம்
சிவவேடத் தவர்க்கூட்டல் சிவனர்ச்சி வேதனமாம்
சிவவேடத் தவர்சொனெறி சிவம்பெறு கொடுப்பதென்பான். (௬)

வேறு.

பூதலத்தி லமர்ந்திலகு முத்தரையுஞ் சித்தரையும்
காதலித்துப் பணிபுரிந்து கம்பலையின் புறவடிய
ஆதரத்தோ டடிபாலி யரியபெரு மாதவத்தீர்
பூதலத்திற் பிறந்தபயன் புல்கவென்ன செய்வலென்றான். (௭)

ஐந்தவித்தமா தவத்தவன் சினமிலு னான்பாற்
சிந்தைவைத்தவன் பொறையின னருள்கொடீசி
எந்தையவ்வசு ரேசன்மாட் டுளங்கனிந் தெளிய
மைந்தனின்மன மகிழ்வுற வழங்குவல் கேட்டி. (௮)

அண்டர்நாயக னடியிணை குறுகிமெய்யன்புத்
தொண்டர்வீடுறு கதைபல வல்லவர் சொலமுன்
உண்டபேதமை மயக்கற வினவியோர்ந் துணர்ச்சி
கொண்டு சிந்தைசெய் திடின்மனங் குழைந்தாற்கூடும். (௯)

வேறு.

அறந்த வாதகல் வடியர்கு. ழாத்திடை யண்மி
நிறைந்த மேதையர் மொழிவன பயில்வன நிதமும்
சிறந்து செய்வன வொருவுவ செவ்வியிற் றெரிந்தோன்
பிறந்த போற்றினைப் பெறுபவர் களின்மிகப் பெரியோன். (௰)

பாத தாண்டவன் பதவியான் விழைவுறு பத்தர்
இரதபோனக மறுசுவை நிகழுத லிணையில்
விரதமாகம முறைபுரிந் தாலய மேவிற்
சரத மெம்பிரான் விடைமிசை தரிசனந் தருவான். (கக)

உன்னு மென்மன மிசைபய முற்றிடு மோடும்
சொன்ன சொற்பலந் தோத்திரந் திருமுனந் தொலையும்
சின்ன நோக்குமுன் னுடல்புரி பவமெலாஞ் சிதறும்
இன்னமாண்பின தாம்விதி ருதத்தலந் தேற்றம். (கஉ)

ஏற்ற மிக்க ப் பதியிடை யெம்மையாட் கொண்டு
தோற்றுரு துறு புனிதவைப் பின்கதிர்ச் சோதி
வேற்றுமைப் படுபொருளெலாம் விரவிய விகிருதன்
வீற்றிருப் பனன்னவன்முடிப் பானிலுள் விருப்பம். (கங)

அற்றவாகுல னயர்வுகொ ளமயமி னமுதம்
பெற்ற தொப்பவத் தானவன் முனிமொழி பெற்றக்
குற்றநீங்கிய முனியடி தொழுதுநீர் குடைந்து
முற்றும் வெண்பொடி பூசினன் மநுமுறை மொழிந்து. (கச)

ஒப்பிலாதபொற் கோயிலு ளொண்மணி யொளியைத்
திப்பியத்தனி வைப்பினைத் தேவர்கள் தேவை
முப்புராரியை நோக்கின னிருகர முகிழ்த்தென்
னப்பனே யெனையாண்டரு ளெனக்குதித் தயர்ந்தான். [கரு]

அட்டமாமல ரிட்டருச் சனைபுரிந் தனிமொய்
மட்டுவார்குழன் மயிலினை வணங்கியிம்மண்மேல்
இட்டமாப்பல நாளருந்தவமுயன் றிருந்தான்
நட்டமாடிய பெருந்தகை திருவுள நயந்தான். [கசு]

வேறு.

அடியவருக் கெளியனெனு மமலனவ னெதிர்தோன்றிக்
கொடியவசு ரரிலரிய குணமுடியோ யெனைநோக்கி
நெடியதவ மாற்றிடுமுன் னினைவேது புகல்கவெனப்
படிமிசைவீழ்ந் தெழுந்துமிகப் பணிவுகொடு புகல்கின்றான். [கஎ]

பாழ்வயற்றி னுணவினுக்காப் பலவினைக ளினிதியற்றுந்
தாழ்வகற்றி யழிவுபெறு தநுகரணம் படதுறும்
வாழ்வலியை யறமாற்றி யுனதுகண நாதனெனும்
வாழ்வருளல் வேண்டுமென மலரடியிற் றாழ்ந்திசைத்தான். [கஅ]

புண்ணியமா னவர்கருது புனிதவரம் விரும்பினோர்
எண்ணியவை யெய்துமெனி லிமயவல்லி கருணைகொடு
நண்ணுதியென் றுயர்விகிருந் நாயகனூர் மறையனுற்றோர்
அண்ணுசத்தி யருளடையா ரடைவர்களோ சிலப்பெயும். [கக]

வேறு.

நாயக னருளாக வொட்டடனுமுள்ள நகமுக மலர்ச்சியோ டகில
நாயகி பண்ணூர் மொழியினை போற்று ஞெண்மல ரலருச்சித்துத்
தூயபா டலினுன் ஞருகிடத் துதித்துச் சுந்தரியருளினுலிமயம்
போயவ ணுமையா டவம்புரி தலத்துப் புலியுருக் கொண்டுகாத்திருந்தான்.

வாலொடு கால்மெய் யசைவறக் கிடக்கும் வன்புலிக்குருவோமே லம்மை
சேலநேநோக்கஞ் சென்றிட மகிழ்ந்தச் சிறுபுலிக் குட்டியோ டோங்கி
மேலெழுந் தொளிசெய் மந்திரமடைந்து விரைசெறி கடுக்கையங்கண்ணிப்
பாலலோசனன்றன் பரவினனிறைவன் பனிமொழி யுருத்துபசரித்தான்.

அவ்வமயத்தோ ரரிவையப் புலியை அருகுறக் கொடுவந்து விடலுங்
கொவ்வையங் கனிவாய்க் குமரிமாதேவன் குளிர்முகநோக்கியெனத்தா
அவ்விய மறுமிப் புலியெளியாள் செய்யருந்தவச் சாலையைக்காத்துச்
செவ்விதின் வணங்கி யுய்திறநாடித் திரமுறவிருந்ததுமாதோ. (உஉ)

ஆதலின் மேலாங் கணுதிப னுக்கி யருள்பெறு நந்தியோடுலக
மோதரு மெழில்சே ருவனளகங்காத்தங் குறைதரு பேறினைநல்காய்
ஆதியே யெனலு மிறையவனருள வக்கமார் கஞ்சுகமணிந்து
சோதிமே விடுபொற் பிரம்புவை வாளுந் துலங்கிட விளங்கியதன்றே. [உங]

நலந்திகழ் நந்தி தன்னொடுசோம நந்தியென் றமரருமொழியப்
பொலந்திக ழரிய வுவளகவாயில் பொருந்தியீற் றிருந்ததாலென்றுங்
குலந்தவ மிவற்றிற் குறைந்தவ ரேனுங் கோதிலார்மகிழ்வுறநடந்தால்
தலமதிற்பரிந்து கூறுவ ரவர்சொல் நக்கவர் கேட்டருள் கொழிப்பார். [உச]

வேறு

கற்றை வார்சடைக் கண்ணுதல் பூங்கழ லெடுத்துச்
சுற்று பவுரிகொள் தூயவன் புலிக்கருள் புரிந்த
பெற்றி கூறினும் பீடுசா லோரிருநாகக்
கொற்ற வேந்தர்செய் தொண்டினை யன்பொடு குறிப்பாம். [உரு]

ஆக்கப்படலம் அ-க்குத் திருவிருத்தம் உஅள.

---

எவனோ படிக்கதிற முளமேனி பெற்றிடுவ னெவனோ வெனுத்தவுடையான்
எவனோ மன்றைக்கிழவ னெழிஞலி னூற்றருள்வ னெவனோகலைக் குரிமையான்
எவனோ திருக்கைகொள விசையாழி னைப்பெறுவ னெவனோ யிசைக்குமுத
அவனே சொலற்கரிய குணமேன்மை பெற்றிடுவ னெவனேயெமக்கருள் [ல்வி
[செய்வான்.

வேறு.

என்றினைய பலதுதிக ளியம்புமிரு காளைகண்மே லிருகண்சாத்தி
வென்றிதரு நாகராட் டிறையிர்கேளினிமையிசை விருப்பமுற்றீர்
சென்றுயல பகலரிய புலவரிட முப்பயின்றீர் சிறப்பாயின்னும்
நன்றுதெரி யப்புகுத்தி குணர்ச்சிகொடு தேர்மினென நவிறலுற்றாள். (க௦)

இருமருவு பேர்மகரஞ் சகோடமுஞ்செங் கோடென்னச் செப்புநான்கு
பொருவருநல் யாழ்நரம்பைப் பண்ணல்பரி வட்டணையும் புகன்றபின்னர்
அருமைபெற வாராய்தல் தைவரலுஞ் செலவுவிளை யாட்டுக்கைமூழ்
மருவில்குறம் போக்கென்னுங் கலைந்தொழில்க ளெட்டென்னும் வகையுணர்
[த்தி.

மெல்லியகை விரல்கணாம் பினின்வார்தல் வடித்தலதன் மீதிலுந்தல்
சொல்லுறழ்த லுருட்டலொடு தெருட்டலள்ளல் பட்டடையின் பெருகுதியான
நல்லிசையின் காணங்க ளெட்டொடு சீரவினை நயமுணர்த்தித்
தொல்லுலகின் வருமிசையின் றிறங்களெலாம் வழுவாமற் சொலிப்பின் போர்
[நாள்.

இசைமரபி னுணுக்கமுறை யுணர்ச்சிபெற தவத்துறையீ றினையாமேர
மிசைவுபெறப் பாடுமினென் றிசைமடந்தை திருவாக்கி னிளிதிற்றுத்
இசைபரவு மசுவதரன் கம்பளனென் போர்வணங்கிச் செறிந்துவண்டு
கசைபெறுபூ வணிகோட்டி யாழிடந்த ழீஇயிசைத்தார் நயக்குலாவ. (கக)

இடையிறெடு பிங்கலையி னியக்கமிகத் தாதாரத் திருந்தேயுச்சி
படவியக்கி நெஞ்சமிட றடனுக்கு மூக்குநடு பல்லுஞ்சென்னி
யிடமெடுத்தல் படுத்தலொடு நலிதலுங்கம் பிதங்குடில மெனவேசொல்ல
துடனேவிய முருட்டொடுதாக் கெனும்வினைப்பா லுள்ளாள வுயர்வுதேங்க.

அறுபதத்தின் குரிகஞ்ச நாதமுழ வின்முழக்க மருவியோசை
யுறவெருகு புணர்ச்சிகழை யிலைவீழ்ச்சி வலம்புரியின் னொலிமின்கொத்திப்
பறவையுயர் வானிலையென் றின்னிசைநா லாழிதுறை பலகண்டுற்ற
வழிஞர்குழாம் பரவசமா யகமகிழ்ந்து வினவிநிற்க வன்புநீடி. (உக)

# மயூரசமாக கூடற்புராணம்.

கண்கணிமை யாதுபுரு கிமிராது பற்றெரியா களம்விம்மாது
வண்மைபெறு வாய்திறவா தியற்றவித்த யாவையென வா[illegible]ர்ந்து
தண்மைபெறு மிடறாம் பொலியிரண்டு மொன்றியமு தககாமென்ன
பண்கணையஞ் செவிவாயிற் பாய்ந்துமனக் கிளாசயுறப் பாடினால். (உஉ)

வேறு

அந்த வெல்லையி னம்மைநங் கலைமக ளருளின்
சிந்தை கொண்டிசை புரியவர் செழுமுக நோக்கி
மைந்தரீ ரிசை வழிமுறை தெரிந்தவ ரானீர்
உந்த நன்னக ரடையினீ டியபுக ழோங்கி. (உ௩)

ஆசிகூறிய வம்மைத னிருமல ரடியை
மாசி லாதபா தலந்தல வுரநமா மன்னர்
வாச மேவுவெண் சலசமேக சரமிசைமருவு
தேசு லாவுசொன் மங்கைபால் விடைகொடு சென்றா. (உ௪)

செல்லு மாற்றிடைச் செல்வர்க ளிருவருஞ்சிறந்த
தல்லி வாணியி னருளினு லின்னிசை தரித்தோம்
நல்ல வவ்விசை பயன்பட யாண்டுச சடையோன்
புல்லு நற்றலம் பாடுவம யாமெழாடு புகழ்ந்து. (உ௫)

பாட்டளிக்கிரன் அமரிர் பட்டிலசேர் புயத்துக்
கோட்டமில்குணக் [illegible]ரிசில ரவாணியிற் [illegible]றுகி
[illegible] ரளிர்த்
கோட்டமோ [illegible] யாதுத்த நல்பு [illegible]ரண்டு. (உ௬)

கொங்கு நாட்டிடைப் பதிபல தொழுது வெள்ளிடையோன்
றங்கு தானமாம் விகிர்தமா புரியினைச சாரத்
துங்க நாகர்க ளனைகளு முனிவருஞ் சுரருந்
தங்கு தாபதர் தொகுதியு மாறுநீள் தடமும். (உ௭)

வேறு.

காம ரங்கள் கனிதர வோங்கிடும
காம ரங்கள் கனிதர வோங்கிடும்
தாம ரைக்குலஞ் சாரும் தடமெலாம்
தாம ரைக்குலஞ் சாருந் தடமெலாம் (உ௮)

கானக்கேசர மாமணங் கண்டிடும்
கானக்கேசர மாமணங் கண்டிடும்
வானத்தாடு வளப்பணை மேவிடும்
வானத்தாடு வளப்பணை மேவிடும். (உ௯)

கதலி வண்டடங் காவிகை காட்டிடும்
கதலி வண்டடங் காவிகை காட்டிடும்
மதுகொள் பூவின் மணமுறு நந்தனம்
மதுகொள் பூவின் மணமுறு நந்தனம். (௫௰)

வேறு.

ஆய்தல் செய்யுட் களையிளைஞர் ஆய்தல் செய்யுட் களையிளைஞர்
தோய்தல் கள்வன் கோடரமாஞ் சோய்தல் கள்வன் கோடரமாக்
காய்தல்தடங் களிற்றினையே காய்தல்தடங் களிற்றினையே
தோய்தல் கனிமுலையமுது தோய்தல் கனிமுலையமுது. (௫௧)

வேறு.

பழமருந்தியுங் காய்கனி யருந்தியும் பழுத்த
தழையருந்தியுஞ் சருகினை யருந்தியுந் தண்ணீர்
விழவருந்தியும் வாயுவை யருந்தியும் விழைவு
கழியநின்று மாதவம்புரி வோர்பல கணத்தார். (௫௨)

ஊசி மீதுகாற் பெருவிர லூதியுற லூன்றி
வாசி நேர்பெற பிரமரந் திரத்துற வளைத்துப்
பூசி யீசனை யிதயதா மரைதனிற் பொருத்தி
பாச நீங்கிடத் தவம்புரி முனிவரர் பலரால். (௫௩)

நாக மன்னர்க ளிருவரு மிசைகண்டு நாடு
மோக தாகமுங் கழுவெயிற் றூற்றினின் மூழ்கி
ஆக மந்துறை வினையெலா மொழுங்குற வாறறி
தோகை பாதிய னாலயந் தொழமனந் தொடர்ந்து. (௫௪)

இருகரஞ்சிர மீதுறக்கூப்பிநோக் கிழிநீர்
ரருவிவாரத்தர வுடலெலலாம் பொடிப்ப நாவயரப்
பொருவி னீணதிச் சடையனே முக்கணற்பொருளே
அருளின் மேனியோ யெனத்துதித் தாலயமடைந்தார். (௫௫)

பிறப்பிறப்பறு பேற்றினை யுதவிடு பெம்மான்
சிறப்புறுந்திரு வடிவினை யிருகணுந் தெவிட்டா
துறப்பெருங்கணு னோக்கினான் மலரினமுகுத்து
வெறுப்புநீங்கிட விழுந்தெழுந் தமலனைவேண்டி. (௫௬)

விலக்கல் கட்டைபே யோசையும் வெடிகுரல் கடத்தல்
கலக்கு சாகத்தினொலியு மேலொருக்கது கழுவல்
இலக்கு தானத்தி னழுவத லென்னுமோரெட்டுக்
கலக்கு குற்றங்க ளின்றி மூவிசையினாற் கனிந்து. (௫௭)

பஃறிறப்பட விரிவுறு மிசைவகை பலவுஞ்
சிஃறிறப்படு மொண்ணாம் பிடையெழச் செய்து
வஃறிறப்படு விடர்செறுவி யலமைவுற விளக்கி
நஃறிறப்படப் பாடினர் தேவகானத்தால். (௧௮)

வேறு.

சேதமற்றி யூகிலைறி சீவாகம மேறிநின்
செய்ய செஞ்சடை யத்தனைப்பரி சுத்தனை நடனத்தனை
காத லீதலி போத போதக நாதனை மலர் பாதனை
நலமெங்கிறு சிறவன் மகிழ்வுறநமனை யுதைதருசீதனை
வேத நெறிநிரு மாறுகணவுறு வேதையொடு செயும்வாதிடை
வெருவவொருகனல் வரையெனும் படிமேலெழும்பிய சோதியே
பேதை மதியினர் காதலுறுகிற பேறுமேதவிடு பிரபுவே
பெருமைநீடுமு னருமைபெறுமருள் பிரியமாய்த்தர வருளவையே. (௧௯)

வேறு.

இருவ ருந் திரு முனின்றி யாழ்தழீஇ மனங்களார்ந்து
பெருகுமா தரவாற் பாடப் பிஞ்ஞகனருள் கூர்ந்து
மருவறு செங்கணேற்று வாகனத் தம்மையோடு
தரிசன மளித்தார் நாகர் சயசயபோற்றி யென்று. (௨௰)

அத்தா சரணம் மமலா சரணம்
நித்தா சரணம் நிமலா சரணம்
முத்தா சரண முதலே சரணம்
சத்தா சரணம் தனியே சரணம். (௨௧)

அருவே சரணம் அமலா சரணம்
உருவே சரணம் உணர்வே சரணம்
திருவே சரணம் தெளிவே சரணம்
குருவே சரணம் கோவே சரணம். (௨௨)

வேறு.

ஆற்றுப் பெருக்கொடுசெல் வந்திப்பிறைக் கொழுந்தும்
நீற்றுப் பொலிவுமுள நின்மலா போற்றியரி
சேற்றுக் கமலமெழிற் செங்கணையுந் தூவியபோ
தேற்றுப் புறந்தவரு மிறைவா நின்றாள் போற்றி. (௨௩)

